# கிறுக்குத் துளிகள்

(கவிதை தொகுப்பு)



பாம்பன் மு.பிரசாந்த்

**வணக்கம்,**

நான் பாம்பன்மு.பிரசாந்த்பேசுகிறேன்.

கவிதை எழுதுகிற ஒவ்வொருவர்க்கும் தான் எழுதுவது பிறர்பார்வையில் படவேண்டும் என்கிற எண்ணம் இல்லாமல் இல்லை. எனக்கும் அதேயாம். இதை மின்நூலாக்கஉதவிசெய்து, வெளியிட்டு உங்களை அடையவைத்திருக்கும்**freetamilebooks.com** தளத்திற்கு என் உளமார்ந்தநன்றிகள்..

பாம்பன் மு.பிரசாந்த்

**மின்னூலாக்கம்: ப.மதியழகன்**

**தொடர்புக்கு:mathi2134@gmail.com**



## உள்ளோட்டம்



*பாம்பன் மு.பிரசாந்த்*

என்னை அறிந்தால்......................................

வானமே எல்லை.........................................

சொந்தமாய் ஒரு சொர்க்கம்

தமிழ்வணக்கம்: .......................................

கவிதாஞ்சலி_கவிக்கோ..................................

மது செய்யும் மாயம் ..................................

தமிழால் இணைவோம் ..................................

*பாம்பன் மு.பிரசாந்த்*

**தமிழ்வணக்கம்** : ..............................................

**நல்லதே நடக்கட்டும்**..............................................

**எப்போது மகிழ்ச்சி** ..............................................

**அழகி** ..............................................

**பட்டாசுப் பிஞ்சு** (Pattaasu pinju ) ..............................................

**நண்பா உனக்காக**..............................................

*பாம்பன் மு.பிரசாந்த்*

**பள்ளிகுழந்தை** : -

:**தொழில்குழந்தை**: ..........................................

**சாவு**..........................................................

**சொல்லாத காதல்** ......................................

**விருப்பம்**.................................................

**மந்திர உலகம்** .........................................

**ஆணா** ?**பெண்ணா**? .....................................

*பாம்பன் மு.பிரசாந்த்*

**காணாமல் போன காதலியே**?......................

**பிரிவு**.................................................................

**விவசாயி**.............................................................

**ஏட்டுக் கல்வி** ? .......................................................

*பாம்பன் மு.பிரசாந்த்*

1

காதுகளில் இருந்து

தொப்புளுக்கு புலம்பெயர்ந்த

தோடுகளாய்

நாமும்நூல்களில்இருந்துமின்னூல்களைநோக்கி நகர்ந்துவிட்டோம்.காலமாற்றத்திற்குஈடுகொடு த்துஓடும்வேகத்தில்எதையும்நாம்எடுத்துக்கொ ள்ளதயாரகஇல்லை.மாறாககையோடுஒட்டிக் கொள்கிறபொருள்களைத்தான்மனம்விரும்புகிற து.

பாம்பன் மு.பிரசாந்த்

அந்தவகையில்உங்கள்உங்கள்கைகளைவந்தடைந்திருக்கும்என்கவிதைகள்,

கட்டளையின்பேரில்

கையசைவுக்குகட்டுப்பட்டு

கற்பனைதளத்தில்

கலவிநடத்திய

பேனாவுக்கும்பேப்பருக்கும்பிறந்தவை.

பாம்பன் மு.பிரசாந்த்

குறிப்பு:

கையெழுத்துக்கும்,காகிதத்துக்கும்பிறந்துகணி
னியால்பேணப்படுகிறது.

கட்டாயத்தின்பேரில்செய்ததால்என்பேனாஏதே
னும்தவறுசெய்திருந்தால்பொறுத்துக்கொள்க.

ரொம்பபேசிட்டேஇருந்தாகவிதைநூல்என்பதை
மறந்துவிடுவீர்கள்.வாருங்கள்கவிதைகளைவாசி
க்கபோகலாம்.

பாம்பன் மு.பிரசாந்த்

# விடிந்ததா?விடியலயா?

*வெடிவைத்துதகர்த்தாலும்*

*வெட்டுறாதபாறை-சிறு*

*தட்டுளிக்கு கட்டுப் படும்*

*(அன்றேல்)*

*பசுமரத்துவேரோடி*

*பலமான பாறைகூட*

*பாதியாக வெட்டுப்படும்.*

*பாம்பன் மு.பிரசாந்த்*

5

*மரத்துக்கும் தோல்வி*

*மலைக்கும் தோல்வி*

*விடியல்யாருக்கு...... .?*

*தானாக உடைந்ததை*

*தனித்தனியே உடைத்தெடுத்து*

*வியாபாரம் செய்பவர்க்கு*

*விடியல்இது.*

*விடிந்ததா ? விடியலயா?*

*பாம்பன் மு.பிரசாந்த்*

6

வாதையால் பிரச்சினை உடல்நலனுக்கு
போதையால் பிரச்சினை பூவுலகுக்கு
சீதையால் பிரச்சனை ராவணனுக்கு -அட
கீதையிலும் பிரச்சனை இதுஎன்னகணக்கு.

நதிநீரும் இல்லையென்று
சதிசெய்தார் அங்கே
சதியென்று தெரிந்தாலும்
விதியென்றோம் இங்கே

பாம்பன் மு.பிரசாந்த்

7

சதியோ இதுவிதியோ அவர்
கைவிரித்தார் அங்கே -நம்
பரணியள்ளி நம்மிடமே
பாட்டிலாக்கி விற்றுவிட்டு
பணம் பார்க்க நம்முன்னே
பைவிரித்தார் இங்கே.

விடிந்தது வியாபாரிக்கு?
விடியாதது விவசாயிக்கு?

பாம்பன் மு.பிரசாந்த்

விளைச்சல் வரட்டும்

பின்விடியல் வரட்டும்

வேறென்ன சொல்ல - இனி

சோறுயார்க்கும் இல்ல.



்பன் மு.பிரசாந்த்

9

# என்னை அறிந்தால்

*ஒருதடையும் வழியில்இல்லை-*

*ஓடுபாதை இலக்காக*

*விண்ணை அறிந்தால்*

*மணமுறிவு மனிதர்க்கில்லை*

*சரியாக பாடுபட்டு*

*பெண்ணை அறிந்தால்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

10

ஓடிஓடி ஊர்முழுக்க

சொத்துபத்து சேர்க்கமாட்டான்

கடைசியான 6 அடி

மண்ணை அறிந்தால்

அத்தனையும் உன்வசம் நீ

அரைகுரையே ஆனாலும்

அடிமனது சொல்லும்வண்ணம்

உன்னை அறிந்தால்

பாம்பன் மு.பிரசாந்த்

11

அறிதோறும் அறியாமை
அறிந்தவர் யாரோ
அறிவாளி அவரென்று
அகிலம் சொல்லும்-இதை
அறியாதார் மடையரென்றும்
அதுவே சொல்லும்.

ஆடும்வரை ஆடிவிட்டு
காடுதேடி ஓடும்
கூடு என்ற உண்மைமட்டும்

பாம்பன் மு.பிரசாந்த்

உணர்ந்திருந்தால் போதும்.

13

# வானமே எல்லை

*ஓங்குயர் புகழ்ப்படைத்த தமிழெடுத்து-நல்ல*
*பாங்குடை கவிசொல்ல இங்குவந்தேன்.*
*எல்லையிலா ஏறுபுகழ் தமிழே*
*உன்சொல்வாங்கிவானமே*
*எல்லையென்று கவிபாட எனைவாழ்த்தடி*

*எல்லை ஒன்றுஇல்லை என்று*
*ஏதும் இங்கே இல்லை..*

*பாம்பன் மு.பிரசாந்த்*

14

பூமியிலே மாந்தர்செய்யும்
புது முயற்சிக்கெல்லாம்
பூதலத்தோர் கண்ணில்படும்
வானமொன்றே எல்லை..

கடைக்கோடியிலே கடலும்வானும்
இணைவதுபோலே தெரிகிறது
எட்டிப்பிடித்து தொட்டிடபோனால்.
இன்னும் இன்னும் நீள்கிறது..

பாம்பன் மு.பிரசாந்த்

15

வானம் ஒன்று இல்லை இருந்
தாலும் இங்கே இல்லை

இல்லாததை எல்லையாக்கி
வெற்றிதேடிஓடு -நீ
வானளாவு புகழ்பெறுவாய்
வாழ்த்திடும் இந்நாடு..



ந்த்

16

# சொந்தமாய் ஒரு சொர்க்கம் தமிழ்வணக்கம்:

*அந்தரத்தின் அந்தரமே*

*சுந்தரத்தேன் தமிழே*

*வந்தெனக்கு நற்றமிழை*

*தந்திடடி நாவினிலே ...*

*தமிழே !!!!*

*பாம்பன் மு.பிரசாந்த்*

17

வினைசெய்த பயனால் இங்கு

பிறந்திருக்கிறேன்

இணையில்லா உனைத்தாயாய்

அடைந்திருக்கிறேன்

துணைசெய்து உனைஉயர்த்த

துணிந்திருக்கிறேன் -இந்த

துர்பிறப்பு அதற்குத்தானே

பிறந்திருக்கிறேன்..

சுகமென்ற ஆனந்தம்

பாம்பன் மு.பிரசாந்த்

18

சொர்க்கத்தில் உள்ளதென்றால்
அகமகிழும் ஆனந்தம்
அதுஎன்ன வீணா??

தகதகவென கதிர்கொதித்து
புவிவெப்பம் பொங்கும்போதும்
குளுகுளுவென வாழும்நிலை
சொந்தசொர்க்கமே..

பாம்பன் மு.பிரசாந்த்

19

*தனிவீடு தானின்றி*

*தார்ச்சாலை வீடாக*

*தன்குடும்பத்தோடு வாழும்*

*புன்மனது வறியவனின்*

*அரைவயிற்று அருங்குடும்பம்*

*குறைவயிற்று கூழ்குடித்து*

*கொஞ்சம் சிரிப்பதுவும்*

*சொந்த சொர்க்கமே*

*பாம்பன் மு.பிரசாந்த்*

20

*சல்லிக்கட்டு வேண்டிஅன்று*

*சுள்ளிக்கட்டின் வலிமைபோல*

*துள்ளிக்கட்டி கூடிஉண்மை*

*சொல்லிக்காட்டிவென்றபோது*

*சொந்தமான சுவர்க்கம்என்று*

*நாமறிந்தோமே ...அங்கு*

*போராட்ட பெண்களுக்கு*

*கடுங்காற்று குளிராலே*

*கைகால்கள் விறைத்தேறி*

*பாம்பன் மு.பிரசாந்த்*

21

கண்கள் நீர்வந்தபோது
இரவலாக வந்தஅந்த
ஒற்றை போர்வை தந்தசுகம்
சொந்தமான சொர்க்கம்
என்றுந் தானறிந்தோமே ...

கையிருப்பில் எப்போதும்
சொர்க்கமுண்டு -இதை
காணாத மனிதர்தான்
கரைவதுண்டு..

பாம்பன் மு.பிரசாந்த்

22

அந்தமில்லா ஆனந்தம்
சொர்க்கம் தருமென்றால்
சொந்தமான சுவர்க்கம்காண
சோகத்திலும் மலர்ந்திருப்போம்.

ஹிஹிஹிஹிஹி...

பாம்பன் மு.பிரசாந்த்

23

# கவிதாஞ்சலி_கவிக்கோ

*மறைந்தஜயாகவிக்கோஅப்துல்ரகுமான்அவர்களுக்காககவிதைசிறகுகள்அமைப்புநடத்தியகவிதாஞ்சலிகவிதை...*

*பால்வீதி பார்க்கசென்ற*

*படைப்பாளி ஒருவருக்கு,*

*கடவுளை காணச்சென்ற-என்*

*கவிதை கடவுளுக்கு*

*காதலாகி கசிந்துருகி*

*கண்ணீர்மல்க கவிதாஞ்சலி*

*பாம்பன் மு.பிரசாந்த்*

24

*தவிக்கும் மனதுக்கு*

*தாய்தமிழில் மருந்திட்டு*

*செவிக்கோர் விருந்தாக*

*தீந்தமிழை தந்தளிக்கும்*

*புவிக்கோர் நாயகன்என்*

*கவிக்கோவின் காலடியில்*

*கண்ணீரை சேர்த்தவாறு*

*காலம் கடத்தநான்*

*கற்றுக் கொண்டிருக்கிறேன்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# 25

படைப்புக்களை பார்த்தமட்டில்

பார்மேவும் போர்மாளும்

பலலட்சம் தூதரிலே

ஒருதூதர் இவர்போலும் ..

அப்துல்கள் இறப்பாலே

அழுதழுது மனமிங்கு

ஆற்றாது தவிக்கிறதே

தேற்றிட ஆளில்லையே ...

பாம்பன் மு.பிரசாந்த்

வல்லரசு இந்தியாவை
  வரவழைக்க எண்ணி எண்ணி
வாழ்வனைத்தும் அர்ப்பணித்த
  அப்துல் அன்று .

வாணியம்பாடிகார நல்ல
  வார்த்தைகளை கூட்டுவித்து
வரலாறு படைத்துவிட்ட
  அப்துல் இன்று ..

பாம்பன் மு.பிரசாந்த்

27

கருப்புமலர் முதலாக
பால்வீதி வரையாக
கவியாளர் பலபேரை
காவுபெற்ற இந்தாண்டில்

ஐயா நீர்பிணமாக
அடிமனது ரணமாக
யாராலும் என்மனநோய்
மாறாது குணமாக .

பாம்பன் மு.பிரசாந்த்

28

வாழத்தகா மனிதரெல்லாம்

வளமுடனே வாழுகையில்

வார்த்தைகளின் வள்ளலே-உன்

வாழ்நாள் நீட்டநான் - என்னசெய்ய

தொட்டுவைத்த காவியத்தை

விட்டுவிட்டு போனாயே

கட்டவிழ்த்த உயிர்க்கூட்டிநீ

காவியம் முடிக்கநான் -என்னசெய்ய

பாம்பன் மு.பிரசாந்த்

காதலித்த வார்த்தைகட்கு

கல்யாணம் செய்துவைத்து

கவித்தொடுத்து உலகெல்லாம்

கவிரசிகர் மனம்பிடித்து

காலத்தால் அழியாத

கவிக்கோ ஓர்களவாணி

ஆம்...

கவியது பாடி

பாம்பன் மு.பிரசாந்த்

# 30

மதியது மயக்கி

மனமதை களவாடும்

நூதன களவாணி- இந்த

களவாணிகாலமான

கனத்தசெய்தி கேட்டநொடி

கல்லும் கரைந்துருக

கடலையையும் கொதிக்குதடி

பாம்பன் மு.பிரசாந்த்

31

மீண்டிங்கு இவர்வந்து
  பல்லாண்டு தமிழ்எழுத
பாழானமனம் வேண்டி
  பாடாய்படுகுதடி...

நீர்திரும்பி பூமிவந்து
நீங்காத கவிதைதந்து
நீண்டகாலம் தமிழ்எழுத,
தவமொன்று செய்துநான்
வரமொன்று கேட்பேன்...

பாம்பன் மு.பிரசாந்த்

ஆனால்

வரங்களே இங்கு சாபங்கள் ஆனால் தவங்கள் எதற்காக *?????*

பாம்பன் மு.பிரசாந்த்

33

# மது செய்யும் மாயம்

மாதை தொடும்போது
மனதிலோர் மாயம்.
வாதை வரும்போது
உடலிலோர் மாயம்
போதை புகும்போது
என்னென்ன மாயம்
உன்னாலே பலருக்கும்
மனதளவில்  காயம்இது

பாம்பன் மு.பிரசாந்த்

மது செய்யும் மாயம் .

மதியிழந்து மதுவருந்தி
கதியிழந்து கதறுகையில்
விதிமீது குறைசொல்லி
வேறென்ன லாபம்.
விடையேதுமில்லை இது
மதுசெய்யும் மாயம்

பதின்பருவ கோளாறு

பாம்பன் மு.பிரசாந்த்

*பாதை மாற்றிபோகும்*

*பாடாவதி நட்புகூட*

*பாழாக்ககூடும்*

*கூடாத பழக்கமென்று*

*உள்மனது சாடும்*

*அனாலும் அதற்கும்ஓர்*

*சமாதானம் தேடும்*

*சிலர்,*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# 36

ஊர்க்கேட்க மேடை போட்டு

மதுஒழிப்பு பேசும்

உடனமர்ந்து பேசப்போனால்

மதுவாசம் வீசும்.

நல்லதலைவர் எனநினைத்த

நம் நம்மனமோ கூசும்

இவராலே நாளைநம்

நாடெல்லாம் நாசம்.

அரசாங்கம் தயாரிக்க

பாம்பன் மு.பிரசாந்த்

37

அடியாட்கள் கடைநடத்த
தடிமாட்டு மக்களெல்லாம்
அடிமாடு போலடங்கி
குடிமாடுஆகின்ற
கொடுமையை என்ன சொல்ல.

ஆசையோடு காத்திருக்கும்
அன்பான மனைவிமக்கள்
தோசையோடு காத்திருக்கும்
தூய்மையானதாய் உள்ளம்-நீ
தள்ளாடி நடக்கையிலே

பாம்பன் மு.பிரசாந்த்

38

*கண்ணாடிபோல் நொறுங்கி*

*பின்னாடி வாழ்க்கையெல்லாம்*

*என்னாகும் தெரியாதா??*

*அன்பான காதலரை*

*காலமது பிரித்துவைக்க*

*அரிவாள் வீச்சும்*

*ஆசிட்வீச்சும்*

*தருவார் என்பது*

*எவ்வித நியாயம்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

மொத்தத்தில் இதெல்லாம்
மதுசெய்யும் மாயம்

இருசுருக்குக்காரி நல்ல
தலைபிரசவகாரிஅவ
வீடு வந்து சேராத
வீட்டுக்கார குடிமகனை
காடுகரை தேடிதிரிஞ்சு
கால்வழுக்கி கீழ்விழுந்து
தாயும்பிள்ளையும் இறைவனடி

பாம்பன் மு.பிரசாந்த்

போய்சேர்ந்த பின்னாடி

வாய்வயிற்றில் அடித்தலறி

அழுதென்ன ஆகும் -நீ

அறியாமல் போனாய்

இதுமது செய்யும் மாயம் ...

சற்றும் கவனமிலா

சகசண்டி அரசே

சாராயம் ஒழிக்கப்புது

பாம்பன் மு.பிரசாந்த்

41

பேரையும் அமையுங்கள்

பேராய முடிவாலே

சாராயம் ஒழியுங்கள்....



# தமிழால் இணைவோம்

# தமிழ்வணக்கம் :

*தமிழே..!!*

*நீஇல்லாமல் எப்படிநான்*

*தனித்திருப்பேன்*

*நீஇல்லாது போனால்நான்*

*தவித்திருப்பேன்*

*தேடியெனும் உனைக்கற்று*

*களித்திருப்பேன்-அந்த*

*தேவாமிர்தம் போலே*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# இனித்திருப்பேன்...

உச்சப்புகழ் பெற்றூறார்
மெச்சத்தகு அருந்தமிழே -நான்
கச்சத்தீவு அருகிருந்து
கன்னித்தமிழ் பருகி-மேலோர்
கற்பனையில் கசிந்துவந்த
மிச்சத்தமிழ் பருகி
மீட்டுகிறேன் கவியொன்று
கேட்டிடு வீர்செவிகொண்டு.

பாம்பன் மு.பிரசாந்த்

44

தமிழால் இணைவோம் தரணியிலே

நாம்

பிரிந்தால்தானே இணைவதற்கு..

பேச்சுக்கு நன்று

பேருண்மை அன்று

அதுசொல்லி இன்று -தமிழால்

இணைந்திடுவோம் வென்று.

பிரிந்தோம் என்பது அறிந்தால்

அறிந்தால் அதுநமக்கு தெரிந்தால்

பாம்பன் மு.பிரசாந்த்

45

தெரிந்தால் தெரிந்தது புரிந்தால்
புரிந்தது புலப்பட்டு தெளிந்தால்,

முட்டவரும் தடையெல்லாம்
முட்டிமோதி அணையலாம்

மொழி என்ற புதுஉணர்வால்
தமிழாலே இணையலாம்

பாம்பன் மு.பிரசாந்த்

46

பொதுப்பண்பு எதுவென்று
  புரியாமல்  போனார் -சிலர்
புரிந்தாலும் எதற்கென்று
  வழி மாறிப்போனார்
வாழ்வு தேடிப்போனார்
  வழிப்போக்கர் ஆனார்
வந்தவழி மறந்தாரோ
  சொந்தநாடு துறந்தாரோ
நம்மவர்கள் ஆங்காங்கே
  தஞ்சமாகிபோனார்..

பாம்பன் மு.பிரசாந்த்

47

நாடுவிட்டு போனாலும்
  நாட்டம்விட்டு போகாமல்
பாடுபட்டு தமிழ்வளர்க்கும்
  பலரிங்கே உண்டு

உள்ளிருந்து கொண்டேநம்
  உயிருக்கு உலைவைக்கும்
பரபாஷா காருணிகள்
  பலபேரும் உண்டு.

பாம்பன் மு.பிரசாந்த்

48

பொதுப்பண்புபுரிதலோடு
 புதுவாழ்வு புனைவோம்
எங்கெங்கு வாழ்ந்தாலும்
 தமிழாலே இணைவோம்

இன்சுவை கனிதமிழை
 இங்கிலீஷ்கார் பேட்டால்
புண்சுவை ஆகிவிட்ட
 புதியதலைமுறைநான்.

பாம்பன் மு.பிரசாந்த்

புண்சுவை ஆக்கிவைத்து

புன்னாக்கி விட்டதுநீர்க்

குமிழ்போல உடையட்டும்- குவலயம்

தமிழாலே இணையட்டும்.

இணைந்தபின்னே...

தனித்தமிழ் பேசுதற்கு

தடை இனி ஏதுநீ

பொற்சலங்கை தமிழெடுத்து

சொற்சிலம்பம் ஆடு.

பாம்பன் மு.பிரசாந்த்

*700 கோடிகளாம்*

*8 கோடிதமிழ்நிலமாம்*

*இனியென்ன தமிழாலே*

*இணைந்திடல் சாத்தியமே..*

*மனத்தாலோ குணத்தாலோ*

*விதியாலோ சதியாலோ*

*அதுவாலோ இதுவாலோ*

*ஆகமொத்தம் எதுவாலோ*

*பிரிந்துள்ள எல்லோரும்*

*தமிழாலே இணையட்டும்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# 51

*இணைந்துள்ள நமைப்பர்த்து*
*எல்லோரும் இணையட்டும்*

*தண்ணீர் தொடங்கி*
*தமிழீழம் வரையாக*
*தமிழாலே இணைந்திட்டால்*
*தகராறுஏது…???*

*தகராறு தொலைந்து*
*தமிழ்நாடு வளர*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# தண்டமிழ் சிறப்பறிந்து

## தமிழாலே இணைவோம்

பாம்பன் மு.பிரசாந்த்

# நல்லதே நடக்கட்டும்

*எழில்மிகு சென்னை நகரினிலேயின்று*
*எழிலிலக்கியப் பேரவையினிலே வந்து*
*அருவிபோல் அறிவுடை அவையோரே*
*குருவி நான் என்கவியால் வணங்குகின்றேன்..*

*தலைவலி தீர்ந்தால் நல்லதுதான்*
*தலைவலிக்கா நாளெல்லாம் நல்லநாளா?*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# 54

கையிருப்பு காசெல்லாம்

கணினிக்குள் நுழைந்தேநம்

பையிருப்பில் அடங்காமல்

பாரதத்தை வளர்த்துவர,

ஏடறியா ஏழைமுதல்

எல்லோரும்ஈறாக

கார்டுபோட்டு காசுபார்க்கும்

நாடு நன்னிலை அடையட்டும்

நல்லதே இங்கு நடக்கட்டும்

பாம்பன் மு.பிரசாந்த்

குடிகெட்ட விவசாயி
　　மனம்கெட்டு தினம்சாக
அதுகேட்ட மனமிங்கு
　　நெறிகட்டி வலிமேவ
எதில்முட்டி நான்சாக
　　தெரியாமல் திண்டாட
தறிகெட்ட பலரிங்கு
　　கிரிக்கெட்டை கொண்டாட
பொல்லாத நிலைமாறி
　　எப்போது சரியாக,

பாம்பன் மு.பிரசாந்த்

# 56

எல்லாரும் பிழைஎன்றால்
எதைசொல்லி நான்நோக..

கண்ணெதிரே செத்தவனை
என்னயென்றுங் கேளாமல்
கென்னியாக்கு நிதிகொடுத்தால்
என்னிய்யா நியாயம்இது?

நம்கனவு ஜெயிக்கட்டும்
நல்லதே நடக்கட்டும்

பாம்பன் மு.பிரசாந்த்

உறுதியுடன் போராடி
இறுதியிலே அடிவாங்கி
போராட்டம் செய்ததொரு கூட்டம்.
போராட்டம் முடிந்த பின்னனே
போராளி என்ற பட்டம்
போட்டுக்கொண்டு திரிவதொருகூட்டம்..

நதிநீரும் வாராமல்
சதிசெய்தார் அங்கே..
சதியென்று தெரிந்தாலும்
விதியென்றார் இங்கே.

பாம்பன் மு.பிரசாந்த்

# 58

சதியோ இதுவிதியோ அவர்
    கைவிரித்தார் அங்கே..
நம்நீரை பாட்டிலாக்கி
    நம்மிடமே விற்றுவிட்டு
பணம்பார்க்க நம்முன்னே
    பைவிரித்தார் இங்கே...

நல்லநிலை வாராதா
    நம்நாடு செழிக்க
நாமெல்லாம் பிரார்த்திப்போம்
    நல்லதே நடக்க

பாம்பன் மு.பிரசாந்த்

சோறுபோடும் சாமியாக

கடலை பார்த்தவன்தினம்

மாறிமாறி சுட்டுப்போட

கடலில் வீழ்கிறான்இது

யாருபோடும் திட்டமென்று

அறியபார்க்கிறான்பூவில்

நாருபோல உள்ளிருந்தே

அழிந்துபோகிறான்... இதிலே

செத்தவனை நாயகனாக்கி

பெத்தவரை பேட்டிகண்டு

பாம்பன் மு.பிரசாந்த்

60

சத்தமின்றி காசுபார்க்கும்
மெத்தனத்தை என்னசொல்ல?

சோறுபோடும் கடலில்சுட்டு
கூறுபோடும் நிலையைவிட்டு
மாறும் நன்னிலை வளரட்டும்
பாரில்நல்லதே நடக்கட்டும்..

சொன்னதெல்லாம் சொச்சம்
என்னென்னவோ மிச்சம்
கன்னித்தீவு முதலாக

பாம்பன் மு.பிரசாந்த்

*கச்சதீவு வரையாக*

*காஷ்மீர் முதலாக*

*கன்யாகுமரி வரையாக*

*எந்நாளும் நமைசுற்றி*

*நல்லதே நடக்கட்டும்..*

*என்னாலே ஒருதவறும்*

*நடக்காது இருக்கட்டும்..*

*பாம்பன் மு.பிரசாந்த்*

62

# எப்போது மகிழ்ச்சி

*காஷ்மீரில் அமைதிவந்து கூடும்போது*

*காவிரியும் தமிழகத்தில் ஓடும்போது*

*இலங்கையிலே போரெல்லாம் ஓயும்போது*

*இந்தியாவின் குழப்பமெல்லாம் மாயும்போது*

*பாம்பன் மு.பிரசாந்த்*

மீனவர்கள் நிம்மதியை நாடும்போது
மாணவர்கள் மகிழ்ச்சியிலே ஆடும்போது
சிட்டியிலே மனிதத்தை தேடும்போது
சின்னபுத்தி இல்லாதோர் வாழும்போது
கருணைஇல்லம் இல்லாமை காணும்போது
பெத்தவனை பெத்தபுள்ளை பேணும்போது
இன்னும் சொல்ல என்னென்னவோ
இருக்கும்போது-பேட்டரி
சார்ஜ் இன்றி என்னுயிரை வாங்கும்போது
மொத்தமாய் ஒன்று சொல்ல எண்ணும்போது

பாம்பன் மு.பிரசாந்த்

64

*சத்தமில்லா தமிழகத்தை*

*சகநாட்டார் காணும்போது*

*சவகுழியில் கிடந்தாலும்*

*சந்தோசம் கொள்வேன்நான்.*

*#என்று_தணியும்*

---

*பாம்பன் மு.பிரசாந்த்*

# அழகி

அழகெனும் சொல்அது
உலகினில் பிறந்தது
அன்பேஅன்பே உனக்காக

பாம்பன் மு.பிரசாந்த்

66

*வாழ்விலும் சரிஇனி*
*சாவிலும் சரிஅடி*
*என்காதல் என்றென்றும் உனக்காக*

*அடி*

*நீகூட அதுபோல எனக்காக*

*வீண்பேச்சு விடுவிடு*
*விரல்கொண்டு தொடுதொடு*
*விளையாட்டாய்வித்தைகள் செய்திடுவேன்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

67

காச்சுமூச்சு சத்தம்விட்டு

மூச்சமுழுந்த முத்தமிட்டு

என்மார்பில் உன்காதல் பதித்திடுவேன்

தோள்சாய்ந்துநீ -உன்

மேல்சாய்ந்து நான்மனம்

ஏதேதோ கதைபேச எண்ணம் கொள்ளுதே

ஆனாலும் நீ எந்தன்

அருகில் வந்தால் மனம்

தட்டிதடுமாறி என்னை தள்ளுதே..

பாம்பன் மு.பிரசாந்த்

68

தேனாக நானிருக்க
தேன்குளவி நீயிருக்க
வீணாகஎதுக்கினி வம்புவழக்கு

மானாக நீயிருக்க
மலைப்பாம்பு போலஉன்ன
மனசாரநாவிழுங்க நேரம்ஒதுக்கு.

வேண்டாத எண்ணங்கள்
வேணாமே செல்லம்-நீ
ஓகேனு சொன்னாமனம்

பாம்பன் மு.பிரசாந்த்

69

உல்லாசத்தில் துள்ளும்.........




பாம்பன் மு.பிரசாந்த்

# பட்டாசுப் பிஞ்சு (Pattaasu pinju )

*அன்னப் பருக்கைஅள்ளி*
*உண்ணத் தொடங்குகையில்*
*எண்ணத்தில் வந்த தந்தச்*
*சிவகாசி சிறுவர் நிலை*

*பாம்பன் மு.பிரசாந்த்*

கொள்ளிக் கொலைமருந்தை

அள்ளிக் கையாண்டு

பள்ளிப் படிப்புவிட்டு

தள்ளி நின்று வாழுகிற

சுட்டிக் குழந்தைகளை

கட்டிக் காப்பாற்ற – எவரோடும்

முட்டிப் பயனில்லை

எட்டி நோக்கினால்.....

பாம்பன் மு.பிரசாந்த்

72

வட்டிக் கடன் போட்ட

குட்டியின் குட்டிகளை

தட்டிக் கரைக்க எண்ணி

கட்டித் தங்கங்களை

சட்டிக் குதிரையாக்கிச்

சாக்கடையில் தள்ளினரோ??

பள்ளித் தளமனைத்தும்

கோயில் செய்யச் சொன்னதனை

பகுத்தாய்ந்து பாராமல்

பாம்பன் மு.பிரசாந்த்

பாரெங்கும் பணம் கொட்டி

கோடானு கோடிகளாய்

கோயில் செய்தோம் -இனி

கோயிற் தளமனைத்தும்

பள்ளி செய்வோம் – அங்கு

பட்டாசுப் பிஞ்சுகளை

அள்ளிச் செல்வோம்.

---

பாம்பன் மு.பிரசாந்த்

# நண்பா உனக்காக

*அன்று கடலில்சிங்களப் படையினரால்*

*சுட்டுக்கொல்லப்பட்ட நண்பன்*

*ப்ரிட்சோவின் மறைவுக்காக....*

*இத்துப்போன பழங்கதையால்*

*செத்துப்போன நண்பனைஎண்ணி*

*கத்திக் கத்திதொண்டத்தண்ணி*

*வத்திப்போச்சு பாத்தீரா ?*

*பாம்பன் மு.பிரசாந்த்*

75

கண்டத்தில் பாஞ்சகுண்டு
தொண்டைக்குழி துளைக்கையிலே
துள்ளத்துடிக்க அவன்
துடிச்ச துடிபுரியலையா??

அரக்கன் மனங்கூட
அரைநொடியாவது யோசிக்குமே
அந்தநொடி சுடும்போது
அறிவுகெட்ட உன்மூள

பாம்பன் மு.பிரசாந்த்

*எந்தஒன்னுஞ் சொல்லலியா?- நீ*
*மனுஷன் என்பது நினைவில்லயா?*

*பாவிகள் தம்படைமடம்காட்ட*
*பாலகன் இவன கொன்னீரோ ?*
*சதியோ ? விதியோ ? யார்செய்தபிழையோ?*
*மிச்சம் மீனவன்கண்ணீரோ?*

*பட்டதும் போதும்*
*கெட்டதும் போதும்....*

*பாம்பன் மு.பிரசாந்த்*

77

பார்த்துச்சகித்து விட்டதும் போதும்..
சில்லறைப்புத்திச்சிங்களஅரசே
சின்னஞ்சிறுவரைசுட்டதும் போதும் .

சோறுபோடும்சாமிஎன்று
கடலை நினைக்கிறான் - சென்றால்
மாறிமாறிபூச்சிபோல
செத்துவீழ்கிறான் - பின்பு
யாருபோடும்திட்டமென்று
அறியபார்க்கிறான்-அவன்

பாம்பன் மு.பிரசாந்த்

அறியாமல் கடைசியிலே
மாண்டுபோகிறான்...

வந்தமறம் மறக்கவில்லை
இந்தநிலை மாற்றிவைக்க
வாளெடுக்கத் தயார்தான்
வாழ்க்கை முறைதோதில்லை..

நிர்வாணப்படம் வந்தால்
நிமிடத்தில் பரவிவிடும்

பாம்பன் மு.பிரசாந்த்

79

நிலைகுலைக்கும் உன்மரணம்
யாருக்கும் தெரியவில்லை
தெரிந்தாலும் பெரிதாக
புரிந்திடபோவதில்லை ..

மொத்தத்தில்

உன்மரணம் எனக்கு
வலிதரும் நிகழ்வெனில்- இந்த
நாய்மேய்க்கும் நகரத்தார்க்கோ

பாம்பன் மு.பிரசாந்த்

*4 நிமிடநியூஸ்.*

*ஆட்சிகட்டிலுக்கு :*

*மீனவன் படுகின்ற*

*மீலா துயரினின்று*

*மீண்டுமொருசுதந்திரம்*

*மீட்டுத் தந்திடு*

*உண்மையில் சுதந்திரம்*

*பாம்பன் மு.பிரசாந்த்*

81

உருவான நாளென்று
உறக்கச் சொல்லிடுவோம்

இது
ஒன்றேனுஞ் செய்திடு-
ஒட்டுவங்கி பெற்றிடு .. ..

நண்பா....
என் தலைமுறையோடு
இத்துயர் ஒழியட்டும்

பாம்பன் மு.பிரசாந்த்

82

உன் உயிர்ஒன்றே

இறுதியாய் போகட்டும்



# பள்ளிகுழந்தை - : :தொழில்குழந்தை:

*பள்ளி குழந்தை:*

*பாட மூட்டை தேவையில்லை*

*பாஸ் பெயிலென கவலையில்லை*

*தேர்வுகள் ஏதுமில்லை - இவர்க்கு*

*தேவையில்லாத குழப்பமில்லை*

*பாம்பன் மு.பிரசாந்த்*

வேலைக்கேற்ப வெகுமானம்
விரும்பும்போது விளையாட்டு
பிரம்பு கண்டு பயமுமில்லை
பிஸ்கட் பாக்சும் தேவையில்லை

<u>தொழில் குழந்தை:</u>

பத்திரமாய் பள்ளி சென்று
பலரோடு சிரித்து பேசி
அன்னை கை சமையலிலே
அன்றாடம் சாப்பிடுகிற

பாம்பன் மு.பிரசாந்த்

## அமோக வாழ்க்கை

முதலாளி முகம் பார்க்க
முன்னூறு முறை எண்ணி
முன்னும் பின்னும் பயந்து நெளியும்
முழு கஷ்டம் ஏதுமில்லை

1 ரூபாய் அதிகம் கேட்டு
ஓனரிடம் அடிவாங்கி
அதன் பின்னர் பணம் வாங்கி

பாம்பன் மு.பிரசாந்த்

அந்த ஒரு ரூபாய்க்கும்
அப்படியே மருந்து வாங்கி
ஒத்தடம் கொடுக்கின்ற
ஓயாத் துயரில்லை.

சிரிப்பின் சாயலை
சிரிப்போரை பார்த்து மட்டும்
இப்படித்தான் சிரிப்பதேன
எண்ணிப்பார்த்து கொள்ளுகிற
சிரிப்பாய் சிரிக்கும் பிழைப்பு இது.

பாம்பன் மு.பிரசாந்த்

<u>*பள்ளி குழந்தை:*</u>

*விடைத்தாள் வந்ததும்*
*வீட்டுக்கு பயந்து*
*விஷக்காய்ச்சல் வேடமிட்டு*
*கலக்கலாய் நடித்து*
*கையெழுத்து வாங்க வேண்டிய*
*கட்டாயம் ஏதுமில்லை*

*மூளையில்  பதியவைக்க*

*பாம்பன் மு.பிரசாந்த்*

முதுகிலே சுமக்கிறோம்

மூட்டை தூக்கி பிழைப்பதற்கு

முன்னோட்டம் போலும்..

<u>தொழில் குழந்தை:</u>

அம்மாவை விட்டுவிட்டு

அசலூரு வந்துவிட்டேன்.

அவள் அடித்ததே காரணமாய்

அனைவரிடம் சொல்லி வந்தேன்.

அடித்தாலும் அன்போடு

பாம்பன் மு.பிரசாந்த்

அடுத்தவேளை சோத்துக்கு
அழைக்கிற அந்த பாசம்
அப்போ எனக்கு புரியலியே.
இங்கு:

ஆராரோ பாடிய அவளை தவிர
ஆராரோ அடிக்கிறார் அய்யோ – நான்
ஆரிடம் போய் சொல்லி அழ.
அய்யோ கொடுமை

பாம்பன் மு.பிரசாந்த்

ஆண்டவா பாராயோ.!

சமுதாயம்:

ஏனிந்த அவலமடா..

என்றிதெல்லாம் ஒழியுமடா

பட்டம் விட்டு பாடி திரிந்து

பள்ளி சென்று பாடம் கற்று

பாரினிலே பகலவராய்

பவனி வர வேண்டிய

பச்சிளம் பாலகரை

பாம்பன் மு.பிரசாந்த்

91

*பணியமர்த்தி படுத்தும்*

*பாடாவதி நிலை ஒழிந்திடும்போது*

*பாரினை நிச்சயம் ...இப்*

*பாரதம் வெல்லும்*

---

*பாம்பன் மு.பிரசாந்த்*

# சாவு

விழுந்த இடத்தில்

எழுந்து பார்த்தேன்.

சரிந்துகிடந்த தென்சரீரம்.

சாவது எவர்க்கும்

ஆவதுஉறுதி -அதை

அறியாதிருந்ததென் அறிவீனம்.

உடலின் பலம்மேல்

உள்ள நம்பிக்கையால்

பாம்பன் மு.பிரசாந்த்

*உதறித் தள்ளினேன் உறவுகளை*
*இன்று ஊரே நிற்கிறது*
*ஒருவரும் அழவில்லை*
*உற்சாகம் தெரிகிறது-என்*
*உயிர்போனதாலோ ?*

*ஊரும் இல்லை*
*உறவும் இல்லை*
*உனக்காக வருந்த*

*பாம்பன் மு.பிரசாந்த்*

94

# ஒருவரும் இல்லை

வாழும்வரையில் அதிகாரம்
செய்ததுஎல்லாம் வீணாகும்.

உன்னை எண்ணி
ஒருவன் வருந்த
உலகில் உன்சாவு
உயர்ந்ததாகும்.
அன்றேல்

பாம்பன் மு.பிரசாந்த்

95

நுந்தம் பிறப்பென்பதே
நுங்கின் இடைக்கசடாகும்.

நல்லவாழ்க்கை வாழஎண்ணி
நாளும் எங்கும் மனிதனே
நல்லசாவு கிடைக்க கொஞ்சம்
நல்ல உள்ளம் கொள்ளுவோம்

பாம்பன் மு.பிரசாந்த்

96

# சொல்லாத காதல்

சொல்லாதகாதல் இல்லாமபோச்சு
துள்ளாத மனமிப்போ
தூள்தூளாஆச்சு - நீ
இல்லாத வாழ்க்கை
இனி வேணாஎனக்கு
இத்தோட முடிஞ்சது-நம்ம
ரெண்டுபேரு கணக்கு

பாம்பன் மு.பிரசாந்த்

*இல்லாமஇல்ல உன்மேல்*

*எல்லையில்லாத அன்பு -நா*

*சொல்லாம போனதுதான்*

*செஞ்சுவெச்ச ஒரேதப்பு*

*கண்மூடித்தனமா காதலிச்சேன்-உன்*

*கல்யாணசேத்திகேட்டு பேதலிச்சேன்*

*கரையிலமீனாக தத்தளிச்சேன்-மனம்*

*கண்ணாடிபோல் நொறுங்கநாதவிச்சேன்*

*வாழ்ந்தாதான் காதலுன்னு*

*பாம்பன் மு.பிரசாந்த்*

வழக்கேதும் இல்லையடி-நா
வாய்திறக்காத குற்றத்துக்கு -இது
வாழ்நாள் தண்டனைடி ...

ஆனது ஆகட்டும்
போனது போகட்டும்
நல்ல வாழ்க்கைஒன்றாக
நடப்பதெல்லாம் நன்றாக
உனக்கொரு வாழ்க்கை உண்டாக
நானுன்டென்றும் உனக்காக.......

பாம்பன் மு.பிரசாந்த்




# விருப்பம்

வேண்டாத பொருளேஎன்றாலும்

பாம்பன் மு.பிரசாந்த்

இல்லையென்றால் விருப்பம்
ஆசை தீபம் அனையா தெரியத்
தூண்டுந் திரியே விருப்பம்.

ஆடவனின் வன்மைமேல்
அணங்குக்கு விருப்பம்.
அணங்கவளின் மென்மைமேல்
ஆண்மைக்கும் விருப்பம்.

நாற்காலி அடையமட்டும்

பாம்பன் மு.பிரசாந்த்

101

எல்லோர்க்கும் விருப்பம்
நல்லாட்சி புரிவதற்கு
யாருக்கு விருப்பம்.......

ஆசை வந்து தொலைத்து விட்டால்
அடையும் வரையில் விருப்பம்
அவரிடமில்லா அனைத்தின்மீதும்
அவக் காச்சியாய் விருப்பம்.

ஒட்டுமொத்த உலகம் இயங்க

பாம்பன் மு.பிரசாந்த்

102

ஒற்றை சூத்திரம் விருப்பம்.
உலகம் என்னும் நாடக மேடையில்
உயர்ந்த பாத்திரம் விருப்பம்.
-பாம்பன்மு.பிரசாந்த்

பாம்பன் மு.பிரசாந்த்

103

# மந்திர உலகம்

*வந்தது சென்றது*

*நின்றது எல்லாம்*

*வாழ்கையின் சுவடுகளே-நான்*

*தந்திர மாக என்*

*மந்திர உலகில்*

*மறைந்து நுழைந்தவனே*

*பாம்பன் மு.பிரசாந்த்*

104

எந்திர மாகவே
மாறிவிட் டிருக்கும்
இந்திய இளைஞர்களே-என்
மந்திர உலகில்
மனநிறை வுண்டு
வந்திங்கு வாழுங்களேன்.

கறைவேட் டிகளால்
காணாமல் போன
கண்ணியம் இங்குண்டு

பாம்பன் மு.பிரசாந்த்

சம்பந்தி போஜனம்
தேவைப் படாத
சமத்துவம் இங்குண்டு.

ஆட்சி நடத்தும் அரசும் நானே
அவசரச் சட்ட போரும் நானே
சாட்சி சொல்லும் வழியும் நானே
சங்கடம் தருகிற பழியும் நானே.
அதுவும் இதுவும் எதுவும் நானே

பாம்பன் மு.பிரசாந்த்

106

*எல்லா நாளும் எனக்கே தானே.*

*இன்னும் இன்னும் நானே நானே*

*சுயநலம் அன்றிது சூத்திரம் தானே*

*-பாம்பன்.மு.பிரசாந்த்*

# ஆணா ? பெண்ணா?

*கட்டிலிலே ஆடவன்தான் ஆதிக்கமா?-இந்த*

*ஆதிக்கத்தால் சமஉரிமை பாதிக்குமா?*

*இயற்கை நம்மை இப்படியும் சோதிக்குமா?-*

*இதை*

*பின்தொடர்ந்தால் இந்த உலகம் சாதிக்குமா?*

*சரிபாதி பெண்ணென்ற நிலை வேண்டுமே-*

*அதை*

*பாம்பன் மு.பிரசாந்த்*

*சரித்துப் பேசிடாத தலை வேண்டுமே*

*சரிபாதி தரமறுத்து சண்டையிடும் மனிதா?*

*அவள்*

*சரிபாதி இல்லையெனில் உயிர்வாழ்வது எளிதா?*

*உறுப்பில் பிரிவினையா? உணர்வில்*

*பிரிவினையா?*

*அடுப்பென்ன விறகென்ன இணைந்தால்தான்*

*வாழ்வு*

*அதுகூட புரியாவிடில் இப்படியே சாவு....*

*பாம்பன் மு.பிரசாந்த்*

109

# காணாமல் போன காதலியே?

*கண்டது ஒருநொடி கண்டது ஒருநொடி*
*காதல் வருதடி கனவிலும் நீயடி.*

*கதலியில் மறச்ச குத்தூசியா என்*
*காதலியே உன்னை தேடுகிறேன்*
*நெஞ்சினில் வாழும் காரிகையே உனை*

*பாம்பன் மு.பிரசாந்த்*

நேரில் காணாமல் வாடுகிறேன்.
காணும் இடமெல்லாம் கண்களை வீசி
தேவதையே உனை தேடுகிறேன்
காணாது போனாலும் கனவில் கண்டு உனை
கைபிடித்து கட்டிலிலே கூடுகிறேன்.

கண்ணசைத்து கண்ணுக்குள்ளே
நுழைந்துவிட்டாய்-பின்
கையசைத்து காற்றோடு
கலந்து விட்டாய்

பாம்பன் மு.பிரசாந்த்

ஆனாலும் அன்பே உன்

இதயத்தை என்னிடத்தில்
கைமாற்றி காதலாக
கொடுத்துவிட்டாய். என்
கன்னித்தன்மை கண்ணசைவில்
பறித்துவிட்டாய்..........

பாம்பன் மு.பிரசாந்த்

# பிரிவு

சொல்லாலே சுட்டு என்னை
கொல்லாமல் கொல்பவளே
பொல்லாத உன் நினைப்பும்
முள்ளாக குத்துதடி.

இல்லாத காரணங்கள்
ஏதேதோ சொல்லி
தள்ளிப்போக திட்டமிட்ட

பாம்பன் மு.பிரசாந்த்

113

*சதிகார கள்ளி*

*பாத்ததெல்லாம் நீயாக*

*கேட்டதெல்லாம் நீயாக*

*வாழ்ந்ததெல்லாம் வழக்கத்துக்கு*

*மாத்திக்குவேன்-என்*

*வாழ்க்கை இனி பெட்டெருன்னு*

*தேத்திக்குவேன்*

*நினைவுகள் கூடிவந்து*

*பாம்பன் மு.பிரசாந்த்*

# 114

நெஞ்சத் திறந்தாலும்
நேராக மனக்கதவ சாத்திக்குவேன்
தேவப்பட்டா ரெண்டு பூட்டு போட்டுக்குவேன்

நாசமா போக சொல்லி
சபிக்க மாட்டேன்-நீ
நாசமா போனாலும்
சிரிக்க மாட்டேன்
மோசமே செஞ்சாலும்
மோசக்காரியே என்னை

பாம்பன் மு.பிரசாந்த்

## 115

*பாசமா பாத்துக்க நட்பிருக்கு.*

*ஆம்...*

*தேசமே அழிஞ்சாலும்*

*வேசமே கலைஞ்சாலும்*

*வாசமே குறையாத நட்பிருக்கு..*

---

# விவசாயி

*அழுதகண்ணீர் ஆறாகி*
*வயல் விளைந்திடுமா?*
*வத்திப்போன வைகைதண்ணி*
*வந்தே சேர்ந்திடுமா?*

*நினைத்து நினைத்து*
*நெஞ்சம் தினமும்*
*ஆழுதே ஆகணுமா?-நாங்க*

*பாம்பன் மு.பிரசாந்த்*

117

*அழுதழுதாவது தண்ணீர் கேட்டுத் தொழுதே சாகனுமா?*



# ஏட்டுக் கல்வி ?

மனிதவாழ்வு எதற்கென்று
 மனதைஆட்டுது ஒருகேள்வி
ஏட்டுப்படிப்பு இதிலெதற்கு
 எதிர்த்துக் கேட்குது மறுகேள்வி.

பதிலும்முண்டு
கேள்வியுமுண்டெனில்
படிப்பினை என்ன இதிலுண்டு.

பாம்பன் மு.பிரசாந்த்

119

தேர்வுக்கு மட்டும்

பாடம் எடுத்தால்

தேடுதல் என்ன இதிலுண்டு.

கண்மூடித் தனமாய் கல்வியை தருவார்

கட்டுக்கட்டாய் விடைகள் தருவார்

பக்கம் பக்கமாய் பாடம் செய்தால்

பரீட்சையில் மதிப்பெண் அள்ளித் தருவார்.

இருபது குரள்கள் மனனம் செய்தால்

இரண்டு மார்க்கு நிச்சயம்தான்-அட

பாம்பன் மு.பிரசாந்த்

இந்த நிலையை மாற்றி விட்டால்
வள்ளுவம் வெல்வது சத்தியம்தான்.

கட்டுபாட்டை கற்பிக்கும் வகுப்பில்
கட்டிப்போட்டு என்ன பயன்?
துட்டுப்பாட்டை பாடும் கல்வியால்
தூய திறமைக் கென்னபயன்?

கட்டுத் தளையினிலே
கட்டிவிட் டோடிஎம்மை

பாம்பன் மு.பிரசாந்த்

*முட்டிடச் சொல்லுதல்*

*முறையாமோ?-நான்*

*எட்டுவைத் தாலென்னை*

*குட்டிடும் தடைகளை*

*வெட்டிட ஓர் முழுக்கல்வி*

*வேண்டாஅமோ?*

*இதுகல்வி என்றநிலை புரிந்துகொண்டால்*

*எதுகல்வி என்றரிதல் எளிதாகுமே?- நல்ல*

*பாம்பன் மு.பிரசாந்த்*

122

பொதுகல்வி என்றமுறை பொய்யான தால்

புது கல்வி தொடங்கிவைத்தால் சுகமாகுமே.

***நன்றி.....***

***தொடர்பு விவரங்கள் அடுத்த பக்கத்தில்.....***



*வாழ்த்தோ வசையோ எதுவானாலும்,*

***என்றும் அன்புடன்***

# ***பாம்பன் மு.பிரசாந்த்.***

*நிரந்தர முகவரி:*

*1/680,சிவ சக்தி நகர்(கிழக்கு வலசை),பாம்பன்-623521,*

*இராமேஸ்வரம்,*

*இராமநாதபுரம்(மாவட்டம்)*

*தொடர்புக்கு (சென்னை முகவரி):*

*17,வன்னியர் தெரு,*

*வெங்கடாபுரம்,*

*குன்றத்தூர்,சென்னை-69*

*பாம்பன் மு.பிரசாந்த்*

